285

இ

உ

கைலாசநாதர் நித்தியகல்யாணி துணை

சுபம் வாழி

அருணாசலஞ் செட்டியாரவர்கள் குமாரர்

காரைக்குடி

ஸ்ரீமான் சி. மு. அரு. நாராயணஞ் செட்டியார்

அவர்கள் விருப்பத்தின்படி



இராமநாதபுரம் ஜில்லா சிவகங்கைத் தாலூகா

வேம்பத்தூர்ச் சங்க வித்வான்

சௌந்தர பாரதி அவர்கள் குமாரன்

# அம்பிகாபதி பாரதி

பாடியது



ஜெய-ஞு மார்கழி-மீ 4-உ பானுவாரத்தினம்

ஜெயம்



சிவமயம்
கைலாசநாதர் நித்தியகல்யாணி அம்மன் துணை

இளையாத்தங்குடி

# நித்தியகல்யாணி கும்மிப்பாட்டு

---

## அம்பிகை.

சீர்மேவு நித்தியகல்யாணி தேவியாஞ்
செங்கண்மால் தங்கையாஞ் செல்வியின்மேல்
ஏர் மேவு கும்மியியற்றிடக் கைலாச
ஏற்றஞ்செய் விநாயகன் காப்பாமே
1-வது

இந்திரன் போற்றிடு மிளையாத்தங்குடி
எழிலாய்க் காத்திடுஞ் சீமாட்டி
சந்திரன் மேவிய சோலைவளமொடு
தண்ணீர்த் தடாகங்கள் நீர்வளமும்
2-வது

கார்மிகப் பெய்திடக் கனநீர் வளத்தினால்
கண்ணிய மேவிய செந்நெலொடு
ஆர்வ மிகுந்திடு கன்னலும் வாழையும்
அதிகமாத் தான்விளை யதிசயமும்
3-வது

ஈசற்குந் தேவிக்குமிசை பெறப்பூசிக்கும்
இன்பமிகு நந்தவனத்தி னோடு
நேசக் குபேரனை நிகர்க்கும் வணிகர்சூழ்
நேர்த்தியார் மாளிகை நேர்வளமும்
4-வது

பால்மிகத் தந்திடும் பசுமட மாட்சியும்
பலபல வந்தணர் வீடுகளும்
கோல் போல வாட்சி செய்கொற்றவர் மேவிடும்
கோல மிகுந்திடு மாளிகையும்
5-வது

மங்கையர் தண்ணீர் பிடித்திடப் பம்புகள்
வனப்பாய் வைத்திடும் மாட்சிமையும்
மங்களந் தந்திடுங் கோயிலார் மானேஜர்
மகிழ்வாய்த் தங்கிடும் மாளிகையும்

6-வது

கல்வி மிகப்பயில் களிப்பாரும் மன்றமும்
காசினி போற்றிடும் மால்தளியும்
நல்லவர் போற்றிடுஞ் சவுந்தர பாண்டியன்
நலமாச் செய்திடுங் கோயிலின் கண்

7-வது

வந்து பணிந்திடு மன்பர் தமக்கெலாம்
வையகம் போற்றிடுஞ் செல்வமொடு
சிந்தை மகிழ்தரு சேய்களும் மாடமும்
ஜெயமெலாம் நிறையத் தானருளி

8-வது

கற்றவர் போற்றிடுங் கைலாச நாதரின்
களிப்பார் பக்கமுறை பவளாம்
நற்குணம் மேவிய சீமாட்டியவள்
நாடெல்லாங் காத்திடும் நங்கையவள்

9-வது

அவனிக்குத்துன்பஞ் செய் யசுரர் தங்களை
அப்பொழுதே நீக்கியாள்பவளாங்
கவலைகள் தானீக்கி யன்பர் மனப்படி
கனநிதி தந்தே களிப்பவளாம்

10-வது

நாட்டினிற்றர் மஞ்செய்யிளையை நகரத்தார்
நலமாகக் கும்பாபிஷேகஞ் செய
தாட்டிக மன்னவர் பெற்றிடச் செய்தவள்
தங்கம் மலைபோற்றரு பவளாம்

11-வது

பண்டா சுரன் றனைவென் றிடும் மாதேவி
பர்வத ராஜ குமாரியவள்
கண்டு நிகர்த்திடு மின்னிசை வாய்ந்தவள்
கந்தன் கணபதி நற்றாயாம்

12-வது

தங்கக் கவச மணிந்திடும் மேனியள்
தாரக ரூபியாய் வந்தவளாம்
செங் கதிர் மண்டலம் மத்தி யுறைபவள்
தேசாதி தேசங்க ளாள்பவளாம்

13-வது

பச்சைப் பசுங்கிளி போன்ற நிறத்தவள்
பாவலர் பைந் தமிழ்தேர் குயிலாம்
இச்சையாய் பூஜைசெய் வேதியர் தங்களை
ஏற்ற மாச் செய்திடுந் தன்மையளாம்

14-வது

அண்ட சராசர மீன்றிடு மன்னையாம்
அற்புதக் கன்னலாம் வில்லுடையாள்
தண்டமிழ்ப் பாவலர் தங்கட்கு நாடோறும்
தக்க பொன்னுடையைத் தருபவளாம்

15-வது

நான் மறையாகமம் நண்ணிடுங் கோயிலாள்
நால்வர் சொல் செந்தமிழ் தேர்பவளாம்
வானுறை யிந்திரனிந் திராணி நாடோறும்
வந்தே பணிந்திடும் பொற் கோயிலான்

16-வது

நாற்பத்து முக்கோணம் மீது வசிப்பவள்
நடராஜர் பங்கினிற் றானிருப்பாள்
பாற்கடல் மீதினில் வந்திடும் லெக்ஷிமி
பண்ணூரும் வாணியின் பங்குறைவாள்

17-வது

மாமதி சூடிய வாசமார் வேணியள்
மயிலினை வென்றிடும் நற்சாயலாள்
வாம மிகுந்திடு மன்ன நடையினள்
வனச நிகர்த்திடுஞ் சேவடியாள்

18-வது

குவளை நிகர்த்திடுங் கண்ணிணை வாய்ந்தவள்
கோடி கோடி செல்வ மீந்திடுவாள்
நவமணி மேவிய தனதன் நிகர்த்திடும்
நகரத்தார் திருவிழாச் செய்திடவே

19-வது

செல்வம் மிகுந்திடு ரெங்கோன் பினுங்குடன்
சிங்கப்பூர் கொழும்பு கோலாலம்பூர்
நல்விதம் பகை நீங்கி நன்னிதி வந்திட
நட்புடனே செய்து வருபவளாம்

20-வது

வெள்ளி விடை தனிற் கைலாச நாதரின்
மேலார் பக்கம் மேவிநிதம்
உள்ளம் மகிழ்ந்திடப் பவனி வருபவள்
உலகம் மகிழ்ந்திடப் பொன்னருள்வாள்

21-வது

முப்பத்து முக்கோடி தேவரும் போற்றிட
முதன்மையாய் வாழுஞ் சீமாட்டி
இப்புவி நாடொறுஞ் செந்நெலைத் தந்திட
இசை மிகுமா மழை தந்திடுவாள்

22-வது

சிங்க வாகனத்தி லேறிடுஞ் சீமாட்டி
சிவனையே வோர் பாகம் பெற்றவளாம்
தங்கமார் மாலையுந் தண்ணார் வயிரமுந்
தக்கோரணிந் திடமின்னுவளாம்

23-வது

மா மதுராபுரி காஞ்சி காசியினில்
மகிழ்வாய் யுறையும் மாதேவி
நேமமாப் பூஜைகள் நித்திய மோங்கிட
நேர்த்தியாய் நல்வர மீபவளாம்

24-வது

அன்பாய்ப் (பவனி) பணிபவர் பகைவரை வெல்பவள்
ஆதரவாகவே காப்பவளாம்
இன்ப மிகுந்திடு நெல்வளங் கோவளம்
எழிலார் வாகன மீபவளாம்

25-வது

செட்டி நாடாட்சி செய்மன்னவர் மற்றைய
செல்வ வணிக ராச்சியரும்
இட்ட மொடுவந்து போற்றிடச் சேய்களும்
எழிலார் நிதிகளும் மீபவளாம்

26-வது

இமவான் மகிழ்ந்திட வீசனே தான்வந்து
இங்கிதமாகவே மாமணத்தை
அமைதியாய்ச் செய்திட வாழும் புரந்தரி
அவனியைக் காத்தி டும்பார்வதியே

27-வது

நாரணி பூரணி பார்வதி சாம்பவி
நலமார் பயிரவி வராகி யென
சிருடனேவன்பர் செப்பிட நோயெலாந்
தீர்த்துச் சுகந்தனைச் செய்திடுவாள்

28-வது

பட்டினசாமி முதற்கொண்டு மற்றைய
பண்பார் வணிகர் பதந்தொழுவே
கட்டி கட்டியாய்க் கப்பலில் நிதிவரக்
களிப்புடன் செய்து வருபவளாம்

29-வது

வேதந் தழைத்திட வேள்வி தழைத்திட
வேண்டிய மாமழை தான் பொழிய
காதலா ராகமங்க டவுளரோங் கிடக்
கண்ணிய நெல்வளமோ ங்கச் செய்வாள்

30-வது

உலகம் மதித்திடும் நாலெட்டுத் தர்மமும்
ஓங்கிட நித்தியஞ் செய்திடுவாள்
நலமான செந்தமிழ் தேவாரந் திருப்புகழ்
நட்பாரு மின்னிசை வோங்கச் செய்வாள்

31-வது

வேதியர் மன்னவர் வேந்தர் வணிகரும்
விரும்பிடுஞ் சைவ மும்வாழியவே
ஓதருங் கீர்த்தியார் நாட்டாரு மெல்லோரும்
உயர்வாய்த் தினந்தொறும் வாழியவே

32-வது

பாவலர் வாழி கொடைவாழி தினம்
பரவிடு ங்கும்மியும் வாழியவே
நாவலர் வாழி யிதைப்பாடினேன் வாழி
நலமாப்படித்தவர் வாழியவே

33 வது

கங்கையணிந் திடுகைலாச நாதருங்
கவினுரும் நித்திய கல்யாணியும்
இங்கிதமான விளையாத்தங் குடியொடு
எல்லாரும் வாழ்கவே நாடொறுமே

34-வது

நன்னிதி நற்குணம் நாடுபுகழ்ந்திடு
நன்கொடை மானேஜர் வாழியவே
பன்னருஞ் கும்மியைப் பாடிடச் செய்திடும்
பண்பார் நாராயணப் புயல்வாழியே

35-வது

செந்திரு நாமகள் தேசமும் தான்வாழி
செய்யும் முயற்சிகள் தாம்வாழி
கந்தன் கணபதி நான்முகன் மாலொடு
கடவுளர் தேவியும் வாழியவே

36-வது

உத்தமர் போற்றிடு மொக்கூருடை யாரும்
ஓகை மிகுபட்டண சாமியாரும்
பத்தியார் கழனி வாசற்குடியாரும்
பண்பு மிகுந்த பெருமருதூர்

கீர்த்தியார் கிங்கிணிக் கூருடையார்களும்
கேண்மையார் பேரசெந்தூருடையார்
ஆர்த்தியார் சேத்தூரரான்பர்களும் தினம்
அம்பிகையருளாற்றுன் வாழி.

காசிராமேஸ்வரங் காசினியெல்லாம்
கடவுள் திருப்பணித் தர்மமொடு
நேசமாக் கல்வி நிதமும் வளர்த்திடும்
நிபுணராம் வணிகர்தாம் வாழி

வெண்பா.

நன்னிதி வாழி நலமார் முகில்வாழி
செந்நெல் கரும்பு தினம் வாழி—நன்னயமார்
பாற்பசுத் தான்வாழி பார்புரக்கும் நன்கொடையோர்
நாற்புவியும் வாழி நலம்.

———

